உ

திருச்சிற்றம்பலம்

மெய்கண்ட தேவன் மெல்லடி வாழ்க

வாசுதேவநல்லூர்ச்

# சிந்தாமணிநாதர் கோவில் வரலாறு



ஆசிரியர் :

திருவாளர் இ. மு. சுப்பிரமணியபிள்ளை யவர்கள்,
அமைச்சர், தென்[illegible]த் தமிழ்ச்சங்கம்,
தலைமைத் தமிழாசிரியர்,
போர்டு உயர்பள்ளிக்கூடம், சங்கரன்கோவில்.



பார்வையாளர் :

செந்தமிழ்ப் புரவலர், இராவ் பகதூர்,
திருவாளர் கோ. ம. இராமச்சந்திரன் செட்டியார்
பி. ஏ., பி. எல்., அவர்கள்,
ஆணையாளர், சென்னை இந்து அறநிலையக் காப்புக்கழகம்.



வெளியிடுவோர் :

திருவாளர் சு. சண்முகசுந்தரம்பிள்ளையவர்கள்,
ஆட்சித் தருமகருத்தர்.
,, வா. மு. மாணிக்கவாசகம்பிள்ளையவர்கள்,
ஆ. இராமசாமியாபிள்ளையவர்கள்,
தருமகருத்தர்கள்.

---

**கோவில் வெளியீடு**

**1944**

உ

திருச்சிற்றம்பலம்

மெய்கண்டதேவன் மெல்லடி வாழ்க

# வாசுதேவநல்லூர்ச்
# சிந்தாமணிநாதர் கோவில் வரலாறு

ஆசிரியர் :
திருவாளர் இ. மு. சுப்பிரமணிய பிள்ளை யவர்கள்,
அமைச்சர், சென்னைமாகாணத் தமிழ்ச்சங்கம்,
தலைமைத் தமிழாசிரியர்,
போர்டு உயர்பள்ளிக்கூடம், சங்கரன்கோவில்.

பார்வையாளர் :
செந்தமிழ்ப் புரவலர், இராவ் பகதூர்,
திருவாளர் கோ. ம. இராமச்சந்திரன் செட்டியார்
பி. ஏ., பி. எல்., அவர்கள்,
ஆணையாளர், சென்னை இந்து அறநிலையக் காப்புக்கழகம்.

வெளியிடுவோர் :
ஆட்சித் தருமகருத்தர்
திருவாளர் சண்முகசுந்தரம்பிள்ளையவர்கள்.
,, வா. மு. மாணிக்கவாசகம்பிள்ளையவர்கள்,
,, ஆ. இராமசாமியாபிள்ளையவர்கள்,
தருமகருத்தர்கள்.

கோவில் வெளியீடு

1944

# முகவுரை

இந்நூலை எழுதும்படி தூண்டிய தரும கருத்தர்கள் திருவாளர்கள் சண்முகசுந்தரம் பிள்ளையவர்களுக்கும் (ஆட்சித்தருமகருத்தர்) வா. மு. மாணிக்கவாசகம் பிள்ளையவர்களுக்கும் இராமசாமிப் பிள்ளையவர்களுக்கும், இதனைச்சரிபார்த்துதவிய சென்னை அறநிலையக் காப்புக் கழக ஆணையாளரும் சென்னை மாகாணத் தமிழ்ச் சங்கத் தலைவரும் ஆகிய செந்தமிழ்ப் புரவலர் இராவ்பகதூர் திருவாளர் கோ. ம. இராமச்சந்திரன் செட்டியாரவர்களுக்கும் எமது மனமார்ந்த நன்றியை உரிமையாக்குகின்றோம்.

தி. மு. சுப்பிரமணியபிள்ளை

17—10—1943.




உ
திருச்சிற்றம்பலம்
மெய்கண்டதேவன் மெல்லடி வாழ்க

# வாசுதேவநல்லூர்ச் சிந்தாமணிநாதர் கோவில் வரலாறு

காப்பு

சீர்த்தேவை மாநகரின் சிந்தா மணிநாதர்
பார்த்துநமக் கின்னருளைப் பாலித்தால்—பார்க்குளுயர்
வெல்லாம் வரும்இன்பாம் இந்த வரலாறு
சொல்லுவ தாகாதா சொல்

## க. இட அமைப்பு.

கோவில் இருக்கும் இடம், சில்லா முதலிய :—

வாசுதேவநல்லூர் திருநெல்வேலிச் சில்லாவின் சங்கரநயினர்கோவில் தாலுகாவில் வடமேற்குப் பகுதியில் இருக்கின்றது. சங்கரன்கோவிலிலிருந்து புளியங்குடி வழியாகப் பதினான்காவது கல்லில் இவ்வூர் உளது தென்காசியிலிருந்து 23-வது கல்லில் இருக்கும் இவ்வூருக்குக் கிட்டவுள்ள இரயிலடி சங்கரநயினர்கோவிலே. இவ்வூருக்கு வரச் சங்கரன்கோவிலிலிருந்து வாடகை மோட்டார் வண்டிகளும், குதிரை வண்டிகளும், மாட்டு வண்டிகளும் கிடைக்கும்.

தென்காசிக்கும் ஸ்ரீவில்லிபுத்தூருக்கும் இடையே அடிக்கடி வாடகை மோட்டார் வண்டிகள் போவதும் வருவதுமாக இருக்கின்றன. தலைநகரமாகிய திருநெல்வேலிக்குப் போகிறவர் புளியங்குடியிலிருந்து நேராக ஓடும் மோட்டார் வண்டிகளிலேயே போகிறார்கள்.

ஊர்ப் பெயரும், பெருமான் பெயரும் :—

இவ்வூர் பண்டைக் கணக்குகளிலெல்லாம் வாசநல்லூர் என்றும் வாசிநல்லூர் எனவும் குறிக்கப் பெறுகிறது வழக்கில் இது வாசவனூர் என்றும் சொல்லப்படுகிறது. வாசவன்—இந்திரன். இந்திரனாற் பூசிக்கப்பட்டுத் தன் பெயர் இவ்வூருக்கு வழங்க வேண்டுமென அவன் வரம் கேட்டுப்பெற்றதனால் வாசவன்நல்லூர் எனவும் வாசவனூர் என்றும் இது பெயர் பெற்றது என்பர் புராண ஆசிரியர். வாசிநல்லூர் என்ற பெயர் இதற்கு வருவானேன் என்று ஆராய்ந்தால் கரிவலம்வந்தநல்லூர் கருவை யென்றும் கருவைநல்லூர் எனவும் வழங்கப்பெறுவது போல இவ்வூரும் வாசி என்றும் வாசிநல்லூர் எனவும் வழங்கப்பெற்றது போலும்! இதற்கு மற்றொரு காரணமும் இருந்திருக்கவேண்டும்- வாசி என்பது குணம், இவ்வூர்ப் பெருமான் எல்லாவிதமான நோய்களையும் வாசியாக்கும் தேவன் ஆதலினால் வாசிதேவன் என அடியார்களால் அழைக்கப்பெறுவான்; குலசேகர பாண்டியன் குட்டநோய் நீக்கிய வரலாறு புராணத்திற் காண்க. ஆதலினால் வாசிதேவன்நல்லூர் என இவ்வூர் பெயர்பெற்று மரூஉ மொழியாக வாசி எனவும் தேவை என்றும் அழைக்கப் பெற்றதாதல் வேண்டும். வாசிதேவனாகிய அர்த்தநாரீசுவரர் சிந்தாமணிநாதர் என்றும் பெயர் பெறுவார்.

சிந்தாமணி என்பது சிந்து + ஆ + மணி அதாவது சிந்திப் போனவைகளையெல்லாம் பழையபடி ஆக்கும்மணி எனப் பொருள்படும். அதனாலேயே விரும்பிய அனைத்தையும் கொடுக்கும் மணி சிந்தாமணி எனப்படுகிறது. எல்லா வித மான நோய்களையும் நீக்கும் குளிகை சிந்தாமணிக் குளிகை என்றும் சிந்தாமணி மாத்திரை எனவும் பெயர் பெறுவது காண்க. ஆதலினாலே வாசுதேவனாகிய இவ்வூர் நாதனுக்குச் சிந்தாமணி நாதர் என்ற பெயர் அமைந்தது எவ்வளவு பொருத்தம், பாருங்கள். சிந்தாமணி நாதர் புளியமரத்தடி யில் எழுந்தருளியதலைவர், புளியமரம் இவ்வூர்த்தலமரம். புளியமரம் — சிந்தம். இவ்வூர்ப் புராணம் மூர்த்திச் சிறப் புக்கூறும் படலத்தின மூன்றாவது பாடலில் "சிந்தத்தண் ணிழலார் சிந்தாமணி யண்ணல்" என்று கூறுகின்றது. ஆதலினாலே சிந்தமரத்தடியில் எழுந்தருளியிருக்கும் மணி, சிந்தாமணி என அழைக்கப் பெற்றார் எனக்கூறும் காரணம் மிகவும் பொருத்தமாக இருப்பது நோக்குக.

மலை, குன்று, ஆறு, குளம் :—

மேற்குத்தொடர்ச்சி மலையின் அடிவாரத்திலே இவ்வூர் இருக்கிறது. இவ்வூரின் தென்மேற்கில் இம்மலை கோட்டை மலை எனப்படுகிறது. அதற்கு மேலே குளிராட்டி என் றும், அதன் வடபகுதி கோவில்மலை பளிச்சிமலை எனவும் அதன் மேலே கள்ளிமலை என்றும் இம்மலைப் பகுதிகள் பெயர் பெறுவன. கோட்டைமலை யாற்றின் தென்கிளை தான் சிந்தாமணி ஊர்க்குளங்களுக்குப்போவது, அதன் வட கிளை இவ்வூரின் மேற்கேயுள்ள பெரிய குளத்தை நிரம்பு கிறது. பெரிய குளத்துத் தண்ணீர் அதன் கீழேயுள்ள

பல குளங்களை நிரப்பிப் போற்றுகின்றது. இங்கே மரங்கள் அடர்ந்த காடுகளும் இருக்கின்றன.

கள்ளி மலையில் பாலையாறு என்பது தோன்றுகின்றது. இது தலையணை என்பதனால் தடுக்கப்பட்டு இவ்வூர்க் குலசேகரப்பேரி என்ற மிகப்பெரிய குளத்தையும் சிவகிரியைச் சேர்ந்த இராசசிங்கப்பேரியாகிய நீர்வாடாக் குளத்தையும் நிரப்பி வழிந்தோடி மேலும் பல குளங்களை நிரப்பி வாழ்விக்கின்றது. வைப்பாறு (நிட்சேபநதி) என்றும் கருப்பையாறு எனவும் கூறப்பெறும் பேராறு இங்கே தான் தோன்றுகிறது. ஆனால் இது மலையிலிருந்து தோன்றுவதல்ல. இது பெரியகுளக் கழிவுநீர் வரும் இடத்திலுள்ள இயற்கை ஊற்றிலிருந்து தோன்றி ஓடி வருகிறது. இதன் வரலாறு முன்னே கூறுவோம். கோவிலையடுத்து வடகிழக்கில் கும்பக்குளம் இருக்கிறது.

பெரியகுளம், குலசேகரப்பேரி, இளங்குளம், சித்தாமணிப்பேரி, நாராயணப்பேரி, அம்மைச்சியார்குளம், கூனிக்கரைக்கால் முதலிய பெரிய பெரிய குளங்களாலும் கால்களாலும் சூழப்பெற்ற இவ்வூர் நீர்வள நிலவளத்தில் ஒரு வகையிலும் குறைவில்லாதது. இங்கே விளைகின்ற நெல் முதலிய தானியங்கள் மிகவும் கொழுமை வாய்ந்தவை. தென்னந்தோப்புகளும் மாஞ்சோலைகளும் கண்ணுக்கு இனிமையையும் மிக்க பொருள் வருவாயையும் தருவன. ஆதலின் சங்கரன்கோவில் இளவரசனேந்தல் போன்ற மிகத்தொலைவிலுள்ள பணக்காரர்களும் இவ்வூரில் நிலம் மிக உடையவர்களாக இருக்கின்றனர்.

மக்கள்தொகை, தங்கும் இடவசதிகள், பிறசிறப்புக்கள் :

வாழ்க்கைக்கு எல்லா வகையாலும் பொருத்தமுடைய இவ்வூரின் மக்கள் தொகை 1941-ல் எடுத்த கணக்குப்படி 1.2134. 1911ன் கணக்குப்படி 9882ஆக இருந்தது கழிந்த முப்பது ஆண்டுகளில் ஐந்தில் ஒன்றுதான் கூடியிருக்கிறது. 1941-ல் இவ்வூரில் 2591 வீடுகள் இருந்தன.

பழைய காலத்தில் காட்டிலாகாத் துணை அதிகாரி ஒருவர் இங்கே இருந்தார். இப்போது உப்பள அதிகாரி ஒருவ (Abkari Sub Inspector) ரும் வரிவசூல் அதிகாரி (Revenue Inspector) ஒருவரும் இருக்கின்றனர். சிவகிரியின் கிளையாக ஒரு சிறு மருந்துச்சாலை இருக்கிறது. முதல்தரமான ஆண் ஆரம்பப்பள்ளியும், பெண் பள்ளியொன்றும் நாட்டாண்மைக்கழகத்தாரால்வைக்கப்பெற்றுள. மகமதியர் ஆரம்பப் பள்ளிக்கூடம் ஒன்றும் இன்னும் பல ஆரம்பப்பள்ளிகளும் இங்கே உண்டு. இராசபாளையத்தின் கிளையாக ஒரு சிறு அஞ்சல் நிலைய (Branch Post Office)ம் இருக்கிறது. முன் இது சங்கரன்கோவிலின் கிளையாக இருந்தபோது அஞ்சல்கொண்டோடி (Runner) குறுக்குப் பாதையாகப் போய்வருவான் ; இக் குறுக்குவழி சங்கரன் கோவிலிலிருந்து ஒன்பது கல்தான் இருக்கிறது.

தங்குவதற்குக் கிராமச்சாவடியும், வழிப்போக்கர்விடுதி (Travellers Bungalow)யும் இருக்கின்றன. கீழத்தெருவில் சிவகிரிக் கைலாசம்பிள்ளையவர்கள் சத்திரமும், தெற்குத் தெருவில் ஊர்ப்பொதுச்சத்திரமும் இருக்கின்றன. பொதுச் சத்திரம் இப்போது கோவில் தருமகருத்தராக இருக்கும்

திரு. இராமசாமிப் பிள்ளை யவர்கள் ஆளுகையில் நடந்து வருகிறது. திருவிழாக்காலங்களிற்கூடும் ஆயிரக்கணக்கான மக்கள் தங்குவதற்கு மிகவும் வசதியாகக் கோவிலின் பந்தல் மண்டபம் விளங்குகின்றது.

இப் பக்கத்தில் பழங்காலக் கல்லறைக் குடுவைப் பாண் டங்கள் காணப்படுகின்றன. இவை மதமதக்கத் தாழி யெனவும் முதுமக்கட்டாழி யென்றும் பெயர் பெறும். வெளி நாட்டு இரும்பு இறக்குமதியால் அழிக்கப்படும் வரை இரும்புருக்குக்தொழில் இவ்வூரில்நடைபெற்றது. மகமதியர் காட்டுக் குதிரைகளைப் பழக்கிவந்தார்கள். பக்கத்துப் பாறை களில் ஒருவகை மண் (Dolomite) வெட்டி யெடுக்கப்பட்டுக் குச்சிகளாகச் செய்யப்பெற்றுக் குழைத்து நெற்றியிற் சமய அடையாளமாக அணியப்பெறுகின்றது.

## உ. கோவில்.

### கோவிலின் தோற்றம், அகல நீளம் :

கோவில் பெரியசாலையிலிருந்து இரண்டு பர்லாங்கு தூரத்தில் மிகப் பெரிய தோற்றத்துடன் விளங்குகின்றது. சங்கரன்கோவில் தாலுகாவிலுள்ள கோவில்களில் மிகப் பழைய பெரியவைகளில் இதுவும்ஒன்று; கோவில் அமைப் பினைப் பார்த்தால் சங்கரன்கோவிலுக்கும் மிக முற்பட்ட தாதல் வேண்டும் என்பது புலனாகிறது. இது அடிக்கடி பேணிச் செப்பனிடாத நிலைமையில் உள்ளது. இதன் அளவு விவரம் அளவுப் படத்திற் காண்க.

**கோவிலின் பல பகுதிகள், சுற்றுக்கள், மண்டபங்கள் மூர்த்திகள் :**

கோவிலினுள்ளே சென்று கருப்பக் கிரகத்திலுள்ள அம்மை யப்ப (அர்த்தநாரீசர்) ராகிய சிந்தாமணி நாதரை வணங்குவோம்.

கருப்பக்கிரகத்துக்கடுத்தது அர்த்த மண்டபம். இதிற் பள்ளியறைச் சொக்கர் இருக்கிறார். இதற்கடுத்த அந்தராள மண்டபத்தில் வல்லபைப் பிள்ளையாரும் மாமண்டப வாசலில் வாயில் காவலரும் இருக்கின்றனர். மாமண்டபத்தின் தென் மேற்கில் அம்மையப்பராகிய சிந்தாமணிநாதரும், சந்திர சேகரரும், நடுவே நந்தியும், வடபுறம் சிபலிநாயகர், பிள்ளையார், கங்காளநாதர், அப்பர், சுந்தரர், மாணிக்க வாசகர், திருஞானசம்பந்தர், அத்திரதேவர், அதிகார நந்தி, சண்டேசுவரர், இரவிவருமமன்னர், சிவகாமியம்மை யோடு கூத்தப்பிரான், காரைக்காலம்மை, வள்ளியம்மை தேவயானையுடன் ஆறுமுகநயினார், இளமுருகர், வீரவாகு தேவர், இவர்களும் எழுந்தருளியிருக்கின்றனர். இதற்கடுத்த மணிமண்டபத்தில் பள்ளியறை இருக்கிறது.

அடுத்தது சுற்றுமண்டபம், கிழச்சுற்றில் சந்திரன் சூரியன் நந்தி கிணறு மடைப்பள்ளி இவை உள. தெற்குச் சுற்றில் அறுபத்து மூன்று நாயன்மாரும், தெற்கணு மூர்த்தியும், சொக்கர் மீனாட்சியும், சுரதேவரும், எழு கன்னியரும், வீரபத்திரரும், பிள்ளையாரும், மேலைச்சுற்றில் பிரியாவிடையாரோடு கலியாணசுந்தரமூர்த்தியும், இடப் பாகவல்லியோடு வைத்திய சிந்தாமணிநாதரும், மேலவாசற்

போத்தியாகிய திருமாலும், சாத்தனும், பிள்ளையாரும், வள்ளிதேவயானையோடு ஆறுமுகரும், வடக்குச் சுற்றில் நான்முகனும், யானைத் தொட்டியும், சண்டேசுவரரும், சனியும், காளியும் உளர்.

இவைகளைச் சுற்றிக்கொண்டு கோபுரவாசலுக்கு வந்தால் அதிகார நந்தி எழுந்தருளி யிருக்கின்றார். இதைத் தாண்டினால் இருப்பது கொடிமர மண்டபம். இதில் கொடிமரமும் பலிபீடமும் பிள்ளையாரும், கோவில் வேலைநிலையமும், வியஞ்சன அறையும், வாகன அறையும், ஒன்பதுகோளும், வள்ளிதேவயானையோடு ஆறுமுகரும் இருக்கின்றனர். இதனை அடுத்துள்ள ஊஞ்சல் மண்டபத்திலுள்ள அம்பலவாணர் மண்டபத்தில் கல் திருமேனியாகக் கூத்தரும் சிவகாமியம்மையும், காரைக்காலம்மையும், புலிக்கான் முனிவரும் நிலைபெற்றுள்ளனர். இதற்கடுத்த குடைவரு வாசலில் தென்புறம் பிள்ளையாரும் வடபுறம் இளமுருகரும் உளர். வெளிச்சுற்றில் களஞ்சியமும் மண்டபமும், காளி கோவிலும், வயிரவரும் உள்ளன. வெளியே பந்தல் மண்டபம் மிகப் பெரியதாக இருக்கிறது. இதன் வடக்கே அதாவது கோவிலுக்கு வடகிழக்கில் நூற்றறுபத்தைந்தடிச் சவுக்கமாகத் தென்புறம் மண்டபத்துடன் கும்பக்குளத் தீர்த்தம் உள்ளது. பந்தல் மண்டபத்தின் தென்புறம் கோவிலைச் சேர்ந்த வீடுகள் இருக்கின்றன. இம்மண்டபத்தின் முன் திருவிழாப் பந்தல் மண்டபம் கற்கால்களோடு மட்டும் இருக்கின்றது. இதன் தென்புறம்தான் திருவாவடுதுறையைச் சேர்ந்த பெரிய திருமடம் உள்ளது. முன் இவைகளுக்கு முன்புறம் அனுப்பு மண்டபம் இருந்ததாம். தேர்நிலையமும் மாமேருவும் கிழைத்தெருவில் உள.

கோவிலைச் சுற்றியுள்ள மாடத்தெருக்களும் தேரோடும் தெருக்களும் சுற்றுக்களே. தெற்கு வெளிச்சுற்றிலுள்ள பெரிய புளிய மரமே தலமரம்; இது ஏராளமாக ஆண்டு தோறும் பூக்கும், ஆனால் காய்க்கவே காய்க்காது.

**காலம், முழுக்கு, தீர்த்தம் :—**

இங்கே திருவனந்தல், விளாபூசை, காலசந்தி, உச்சிக் காலம், மாலைப்பூசை, அர்த்தயாமம் என்னும் ஆறுகால பூசனை நடைபெறுகிறது. திருவனந்தல் தவிர ஐந்து வேளை யும் திருமுழுக்கு உண்டு. கோவிலின் வடகிழக்கிலுள்ள கும்பக்குளம் ஒருதீர்த்தம், கருப்பையாறு எனப்பெறும் வைப்பாறு மற்றொரு தீர்த்தம். திருவிழாவின்போது ஆற் றில் பந்தற்போட்டுத் தீர்த்தவாரி நடைபெறும்.

## ௩. சுற்றுக்கோவில்.

வடகிழக்கிலுள்ள ஈசானப்போத்தி கோவிலும், கன்னி யில் உள்ள வெங்கடாசலபதிப் பெருமாள் கோவிலும் இதன் சுற்றுக் கோவில்கள். வெங்கடாசலபதிப் பெருமாள் தெற்குத் தேர்த்தெருவின் மேலக்கோடியில் இரண்டு நாச்சியார்களு டன் கோவில் கொண்டிருக்கிறார். இவர்களுடைய எழுந் திருத்துச் செப்புத் திருவுருக்களும் உள.

## ௪. சிற்பச் சிறப்புகள்.

**தூண்கள், கொடுங்கைகள், வர்ண வேலைகள் :—**

திருத்தூண்கள் யாளிகளோடு பெரியனவாயுள்ளன, கொடுங்கைகள் கல்லினாலே மிக அழகாகச் செய்தமைக்கப் பெற்றிருக்கின்றன. இவைகளைப் பார்க்கும்போது சங்கர நயினார்கோவிலுக்கு முன்னதாகவே இது கட்டப்பெற்றி ருக்கவேண்டுமென்பது தெரிகிறது. இதிலிருந்த அழகான வர்ண வேலைகள் அழிந்து உருத்தெரியாமற் காணப்படு கின்றன.

**திருந்தேரும் வாகனங்களும் :—**

மரத்தினாலாகிய அழகிய பெரிய தேர் இருக்கிறது. இது ஆனிப்பெருந்திருவிழாவில் ஓடும். இதிலுள்ள வாகனங்கள் பின்வருவன:—இடபம், சிறு இடபம், பெருச்சாளி, மயில், பூக்கேடயம், காமதேனு, பூதம், இந்திர விமானம், யானை, பல்லக்கு, கண்ணாடிச் சப்பரம், தங்கப்பல்லக்கு, தங்கத் தண்டியல், கைலாசபருவதம், குதிரை, கூத்தர் சப்பரம்.

## ரு. ஆட்சி.

சென்னை, இந்து அற நிலையக் காப்புக் கழகத்தால் நியமிக்கப்பெறும் மூன்று தருமகருத்தர்களின் ஆளுகையில் இக்கோவில் இருந்து வருகிறது. அவர்களில் ஒருவர் ஆட்சித் தருமகருத்தராக இருப்பார்.

## சா. வரவு செலவு.

**திருவிழாக்கள் :—**

ஆனி மாதம் நடைபெறுவதே பெருந்திருவிழா. திருவாதிரை, சூரசம்மாரம், நவராத்திரி முதலிய ஆட்டைச் சிறப்புக்களும் சிறப்பாக நடைபெறுகின்றன.

**அருச்சனை :—**

அட்டோத்திரம், திரிசதை, சகசிரநாமம் ஆகிய அருச்சனைகள் கோவிலுக்கு முறையே அரையணா, ஓரணா, ஓரணா வருவாயுடனும், அருச்சகர் முதலியோருக்கு முறையே ஒன்றே காலணா, நாலரையணா, ஒன்பதணா வருவாயுடனும் செய்யப்பெறுகின்றன.

**தேர், வாகனம், நகை முதலியன :—**

தேரின் விலை ரூ. 5000, வாகனங்களின் விலை ரூ. 975, நகைகள் ரூ. 990—8—0; அங்கி முதலிய ரூ. 674, மரப்

பெட்டி முதலிய ரூ 270, விளக்குத்தட்டு முதலிய ரூ. 327-8-0, பாத்திரங்கள் ரூ. 303-8-0 பட்டு முதலிய துணிகள் ரூ. 138—8—0 பெறும். இவை மதிப்புவிலையே.

நிலச் சோத்து விவரம் :—

நாராயணப்பேரி நஞ்சைஇனும் 165 எக்கர் 90 செண்டு. இதன் மதிப்பு விலை முன் ரூ. 30000 ; இதன் வருமானம் முன் மதிப்பு ரூ. 1500. சிந்தாமணிப்பேரி நஞ்சை எக்கர் 95 செண்டு 78; இதன் மதிப்பு விலை முன் ரூ. 10000, இதன் வருமானம் முன் மதிப்பு ரூ. 729; சிந்தாமணிப்பேரிப் புஞ்சை நிலம் 190 எக்கர் – 62 செண்டு; இதன் முன் மதிப்பு விலை ரூ. 7000 ; முன் மதிப்பு வருவாய் ரூ. 400 தோப்புகள் 8 எக்கர் 78 செண்டு உண்டு. பல பனைமரங் களும் எலுமிச்சை மரங்களும் இருக்கின்றன. ஆறு வீடுகள் உள. இவை போகக் குளம் புறம்போக்காக நாராயணப் பேரியில் 68 எக்கர் 73 செண்டும், சிந்தாமணிக் குளத்தில் 54 எக்கர் 46செண்டும், கால்வாய்ப் புறம்போக்காக 13எக்கர் 31 செண்டும் இருக்கின்றன.

இக் கோவிலுக்குச் சொந்தமாக வாசுதேவநல்லூரில் ரூ. 25900 முன் மதிப்புள்ள அயன் நஞ்சை 36 எக்கர் 65 செண்டும், ரூ. 375 மதிப்புள்ள அயன் புஞ்சை 2 எக்கர் 50 செண்டும், ரூ.7150 மதிப்புள்ள இனும் புஞ்சை 76 எக்கர் 40 செண்டும், நாரணபுரத்தில் ரூ. 9750 மதிப்புள்ள அயன் நஞ்சை 29 எக்கர் 21 செண்டும், ரூ. 8250 மதிப்புள்ள இனும் நஞ்சை 17 எக்கர் 33 செண்டும், ரூ. 1500 மதிப்புள்ள புஞ்சை 72 எக்கர் 57 செண்டும், சுப்பிரமணியபுரத்தில் ரூ. 500 மதிப்புள்ள புஞ்சை 5 எக்கர் 95 செண்டும் இருக் கின்றன.

## பசலி 1351ன் வரவு

வரவு

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1351-ம் பசலி ஆரம்ப இருப்பு | ... | 253 | 15 | 2 |
| வாரம் குத்தகை வருமானம் | ... | 2812 | 15 | 0 |
| நெல் விற்று முதல் வரவு | ... | 2123 | 4 | 8 |
| இனாம் நில வருமானம் | ... | 342 | 7 | 0 |
| சில்லறை வரவு | ... | 63 | 12 | 0 |
| உபய வரவு | ... | 129 | 8 | 0 |
| கடை வாடகை வரவு | ... | 32 | 13 | 0 |
| பிற வரவு | ... | 139 | 5 | 0 |
| பட்டாமாற்றுதல் வரவு | ... | 70 | 0 | 0 |
| முன்பண வரவு | .... | 1553 | 0 | 0 |
| பலசரக்குக்கடை வரவு | ... | 715 | 1 | 10 |
| சில்லறைக்கடை வரவு | ... | 134 | 6 | 1 |
| லீகமாற்று வரவு | .... | 780 | 0 | 0 |
| ஆக முன்னிருப்புள்பட | .... | 9150 | 8 | 4 |

# செலவுக் கணக்குவிவரம்.

செலவு

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| பணியாள் சம்பளம் | .... | 871 | 11 | 11 |
| படித்தரம் | ... | 1256 | 8 | 5 |
| திருநாள் | .... | 2525 | 15 | 8 |
| கட்டளை | ... | 61 | 0 | 0 |
| நிலமராமத்து | .... | 202 | 5 | 2 |
| கட்டிட மராமத்து | ... | 147 | 8 | 9 |
| கட்டிடம் புதுப்பித்தது | ... | 45 | 12 | 0 |
| அரசிறை | ... | 598 | 15 | 10 |
| ஊராட்சி | .... | 4 | 4 | 0 |
| நகைகள் | ... | 155 | 4 | 6 |
| கல்வி முதலிய | ... | 17 | 0 | 0 |
| காப்புக்கழகம் | ... | 529 | 0 | 9 |
| வழக்கு | .... | 223 | 0 | 0 |
| பலவகை | ... | 81 | 9 | 2 |
| கிணறு வெட்ட | ... | 150 | 0 | 0 |
| கடன் | ... | 431 | 2 | 0 |
| முன் பணம் | ... | 671 | 3 | 8 |
| பலசரக்குக் கடை | ... | 663 | 13 | 6 |
| சில்லறைக் கடை | ... | 102 | 8 | 0 |
| கைமாற்று | .... | 410 | 0 | 0 |
| கடைசியில் இருப்பு | ... | 1 | 13 | 0 |
| ஆக மொத்தம் | .... | 9150 | 8 | 4 |

## எ. புராண வரலாறு.

இவ்வூருக்கு "வாச்வனூர்ப்புராணம்" என 1910-ல் அக்காலம் தருமகருத்தராக இருந்த திருவாளர் சொ. பழனிக் குமாருப் பிள்ளையவர்கள் பொருளுதவியால் அச்சேறிய புராணம் இருக்கிறது. அதற்கு அரும் பதவுரை யெழுதி யவர் மதுரைத் தமிழ்ச் சங்க நூற்பரிசோதகர் திருவாளர் மு. இரா. அருணாசலக் கவிராயரவர்கள். இப்புராண ஆசிரி யர் வடகரை என்னப்பெறும் சொக்கம்பட்டித்தானாதிபதி யாக இருந்த பேரறிவாளர் செந்தமிழ்ப் புலவர் பொன்னம் பலம் பிள்ளையவர்களாவார். சொற்சுவை பொருட்சுவை மலிந்த இவருடைய கவிகள் பாராட்டிப் படித்சறிதற்குரி யன. இந்நூலாசிரியர் காலம் இற்றைக்கு நூற்றுப் பதி னைந்து ஆண்டுகளுக்கு முன் என்பது தக்க ஆதாவுகளினால் வெளியாகின்றது. இப்புராணம் பதினைந்து சருக்கங்களை யும் அறுநூற்று முப்பத்திரண்டு பாடல்களையும் உடையது. அவைகளின் சுருக்கம் பின்வருவது:— 1-வது சருக்கம்— நைமிசாரணியத்துக்குச் சூத முனிவர் வந்து அங்கிருந்த முனிவர்களுக்கு இப் புராணத்தைக் கூறுகிறார். 2-வது சருக் கம்— திருநாடு வைகையோடு கூடிய பாண்டிநாடு, 3-வது— பாண்டி நாட்டில் சிறந்த நகரம் தேவைநகர், 4-வது தலச் சிறப்புச் சருக்கம்— நம்பி என்ற பூசாரி பெருமானை முழுக் காட்டிய பாலைத் தன் கிளிக்குக் கொடுத்தமை கண்டு அவன் மனைவி பூசைக்கு முன் திருடிக்கொடுத்தானென எண்ணி ஓடிக் கிணற்றில் விழுந்து இறந்தாள். நம்பி அவளைத் தேடித் தென்மேற்கில் மலையருகே போய் அகத்தியரைக் கண்டு அவருடைய மனைவி பெயரால் அழைக்க அவள் வந்

தாள். அகத்தியர் அம்மலைப்பக்கம் 'நம்பியம் பொற்றை' எனப்பெயர் பெறும் என்றார்.

**5**-வது ஆற்றுச் சிறப்பு :

பொதிகை மலையின் அடிவாரத்திலுள்ள சிவசயிலத்தின் வடக்கே ஐந்து குரோச தூரத்தில் சம்புகன் என்ற வேடன் தீயின் நடுவே நின்று தவம்புரிய அதனால் அயோத்தியில் ஒரு பிராமணப்பிள்ளை இறந்துபோனான். அது தெரிந்த இராமன் அங்கே வந்து சம்புகனைக் கொன்றவுடன் இறந்த பிள்ளை உயிர்பெற்றான். ஆனால் சம்புகனைக்கொன்ற கொலைப்பாவம் இராமனைப்பற்ற, அதனைத் தீர்க்க இராமன் அச்சிவமலையின் ஐந்து குரோச தூரத்தில் சிவனாரை நிலைபெறுத்தி வணங்கித் தவம் செய்து தீர்ந்த பின்னர், படையுடன் புளிய வனத்தின் தென் மேற்கெல்லைக்கு வந்தனன். மாலைக்கடன் முடிக்கத் தண்ணீர் வேண்ட, சாம்புவன் என்ற கரடி முன் அகத்தியர் புதைத்த நீர்க்குடம் அங்கே இருப்பதுகூற, இராமன் அம்பெய்து அக்கலசத்தை உடைத்தான். அதிலிருந்து ஆறு புறப்பட்டது. அது புதையல் ஆறு அதாவது வைப்பு + ஆறு = வைப்பாறு, கருப்பையாறு, நிட்சேப நதி என்று பெயர் பெற்றது. இவ்வாற்றின் வடமேற்கில் தீர்த்தவாரி ஆறு இருக்கிறது. அதில் சிந்தாமணி நாதரும் அம்மையாரும் நீராடுவர்.

ஆறாவது மூர்த்தியின் சிறப்பு :

இந்திரன் வேண்டிக்கொள்ள, கைலைத்தலைவர் அம்மையப்பராக இங்கே எழுந்தருளினார். இந்திரனால் இவ்வூர் அமைக்கப்பட்டதனால் வாசவனூர் என்று பெயர் பெற்றது. வாசவன்—இந்திரன்.

ஏழாவது புளிய (சிந்த) வனச்சிறப்பு :

வச்சிராங்கன் என்பவன் சிவகணத்துள் ஒருவன். அவன் ஒரு நாள் கைலையில் பரிகலம் சிந்த, "சிந்தமரமாக" எனச்சிவனார் சபித்தார். அதனால் அவன் இங்கு வந்து சிந்தமரமாகித் தவம் புரிந்து இறைவன் இடப்பாகவல்லி யுடன் காட்சி கொடுக்க வீடு பெற்றான். இதன் இருப் பிடம் செங்கத்தாரி வனத் (தென்மலை) தின் தென்மேற்கு, வில்வவனத் (கடையம்) தின் வடமேற்கு, வன்னிவனத் (மடவார்வளாகம்) திற்குத் தெற்கு, களா வனத் (கருவை) திற்கு மேற்கு, குலசேகரப்பேரிக் குளத்துக்கு வருகிற பாலையாற்றுப் பக்கத்து வழியிடத்துள்ள வேலப்பர் கோவி லுக்குத் தென்கிழக்கு, பொதிகைக்கு வடக்கு, போதகாரணி யத் (தாருகாபுரம்) திற்கும் வடக்கு, பராசமுனிவர் இருப் பிடத்திற்கு மேற்கு.

எட்டாவது பிறப்பு :

தக்கன் தவம் செய்து சிவபெருமானுடைய வரத்தால் உமையை மகளாகப் பெற்றுச் சிவனாருக்கு மணமுடித்துக் கொடுத்தான்; அவரை வணங்கமுடியாதெனப் பகைத்து வேள்வி செய்து வீரபத்திரரால் அழிந்து ஆட்டுத்தலை பெற்றான்; பின் உமை தக்கன்மகள் என்ற பெயர் மாற மலை யரசன் மகளாக ஆனாள்.

ஒன்பதாவது சம்பாரி :

சூரபன்மனால் துன்புற்ற இந்திரன் வேண்ட மன்மதன் மலர் அம்பு எய்து சிவபெருமானுடைய நெற்றிக்கண் ணியால் சாம்பலானான்.

பத்தாவது திருமணம் :

சிவனார் பார்வதியை மணம் பேசி மணந்து திருக் கைலாசத்துக்கு அழைத்து வந்தனர்.

பதினொன்றாவது இடப்பாகம் பெறுதல் :

பிருகு முனிவர் சிவனாரை மட்டும் சுற்றி வந்து வணங் கியது கண்ட அம்மை சினந்து அகல இறைவர் அவளைத் தழுவி அம்மையப்ப (அர்த்தநாரீசுவரர்)ராக ஆனார்.

பன்னிரண்டாவது இந்திரன் மகுட பங்கம் :

உக்கிரப் பெருவழுதி மழை வளம் குறைந்தபடியால் அக்த்தியருடைய ஏவலின்படி சோழ சேரரை அழைத்துக் கொண்டு திங்கட்கிழமை விரதம் இருந்து அதன் பயனாய் விண்ணோடு சென்று இந்திரனைக் கண்டு அவனுடைய சிங்காசனத்தில் ஏறி உடன் இருந்து, அதனால் சினந்த அவன் இட்ட ஆரத்தைத் தாங்கி வந்து, மலையிலே மேய்ந்திருந்த நான்கு மேகங்களையும் சிறையிலே அடைத்துவிட்டான். மேகங்களை மீட்க இந்திரன் வந்து போர்புரிந்து வளையால் அடிபட்டு முடியிழந்தான். வேளாளர் ஒருவர் தாமே பிணை யாகிப் பாண்டியனிடம் மேகங்களைப் பெற்று இந்திரனுக்குத் தந்தனர்.

பதின்மூன்றாவது இந்திரன் வரம் பெற்றது :

இந்திரன் இங்கு வந்து தவம்புரிந்து அம்மையப்பரைக் கண்டு ஆற்றில் மூழ்கி முடிபெற்றான்; பெற்று முடியணிந்து செண்பகப் பிள்ளையாரையும் அம்மையப்பரையும் வணங்கித்

துயரம் நீங்கிச் சென்றான். வச்சிராங்கனும் மர உருவம் நீங்கிக் கைலாசம் சென்றான்.

பதினான்காவது இரவிவர்மன் பதம் பெற்றது:

சோநாட்டின் குலசையைஆண்ட இரவிவர்மன் தேவை நகர்வந்து வைப்பாற்றில் மூழ்கிச் செண்பகப் பிள்ளையாரை வணங்கி, கும்பக்குளத்திலும் முழுகி, கூத்தப்பெருமானையும் ஐயனார் மங்கையையும், அம்மையப்பரையும் கும்பிட்டிருந்தான். கனவில் இறைவன் அருளியபடி அவன் தன் மகன் குலசேகரனுக்கு முடிசூட்டி, கோபுரம் கட்டிச் சிலநாள் இருந்து பின் மின்வடிவாகி இறைவர் திருவடியடைந்தான். அம்மையப்பர் அசரீரியாக அவனுடைய உருவத்தைச் சமைத்து வைத்து வணங்கக் கட்டளையிட்டார். அங்ஙனமே அவன் திருவுரு இக்கோவிலில் செம்புருவத்தில் அமைந்து வழிபடப்பெறுகிறது.

பதினைந்தாவது குலசேகரன் குட்டம் தீர்ந்தது:

குலசேகரன் அம்மையப்பரை இரவிவன்மீசர் என அழைத்தான். அது ஆணை பெருமற் செய்த செயல்; ஆதலால் அவன் குட்டநோயடைந்து துன்புற்றான். அருளால் வந்த சிவயோகி ஒருவர் அவனிடம் இதனைக்கூறித் தேவைநாதரை வணங்கக் கட்டளையிட, மன்னன் தேவை நகர் அடைந்து கும்பக்குளத்தில்மூழ்கிச் செண்பகப் பிள்ளையையும் நடனமாடிய ஐயனாரையும் அம்மையப்பரையும் கும்பிட்டான். நாற்பது நாட்கள் கழிந்தவுடன் அவன் நோய் நீங்கி உய்ந்தான்.

குறிப்பு :— தென்னிந்தியாவில் தமிழர் வணங்கிவந்த கடவுளர்களுக்கு வடநாட்டுக் கதைகளை ஏற்றினது சமீப காலத்தில்தான் என்று அறியவேண்டும். ஆராய்ச்சியாளர்கள் வைப்பாற்றிற்கும் இராமன் காலத்துச் சம்பகனுக்கும் சம்பந்தம் இல்லை என்பர். அறிஞர்கள் உண்மைகளை ஆராய்ந்து அறிந்து கொள்க.

## அ. சரித்திர வரலாறு

பழைய கல்வெட்டுக்கள் :

இக்கோவிலில் அளவற்ற கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. கல்வெட்டிலாகாவில் இவை பதிவானதாகத் தெரியவில்லை. ஆனால் வாசுதேவநல்லூரிலிருந்து சங்கரன் கோவிலுக்கு வரும் குறுக்குவழியிலுள்ள ஒரு பாறையிலிருக்கிற கல்வெட்டு மட்டும் 1915ல் A.R. எண் 593 ஆகப் பதிவாகியிருக்கிறது. அது மாறவர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி சுந்தரபாண்டிய தேவனுடைய நான்காவது ஆண்டில் ஏற்பட்ட தமிழ்க் கல்வெட்டு; "பூமலர் திருவும்" என்று தொடங்குகின்றது; கொட்டுகன்பாக்கமான உத்தமதுங்கநல்லூர் வாசிகள் தங்கள் ஊரிலுள்ள குணமாலையீசுவரமுடைய நாயனருக்கு விடப்பட்ட நிலங்களின் மீதுள்ள சில வரிகளைத் தானம் செய்தமையும், கோபுர வாயில் கட்டினமையும், விளக்கு ஒன்றுக்கு நிலம் விட்டமையும் இதிற் குறிக்கப்பெற்றுள்ளன.

சீவில்லிபுத்தூர் மடவார் வளாகம் சிவன் கோவிலின்

உள்ளே வடக்குத் திருமதிலிலுள்ள 1926—27ல் A. R. என் 518வது கல்வெட்டில் வாசுதேவநல்லூரில் தங்கி யிருந்த திரிபுவனச் சக்கிரவர்த்தியாகிய சடாவருமன் வீர பாண்டியத்தேவன் வேம்பக்குடியிலுள்ள கொற்றமங்கலம் என்ற திருக்கற்றளீச்வரநல்லூரைத் திருமல்லி நாட்டின் சிவில்லிபுத்தூரிலுள்ள திருக்கற்றளீசுவரமுடைய நாயனு ருக்கும் படிக்காசு வைத்தருளிய நாயனுருக்கும் தருமம் செய்தான் என்ற செய்தி பதிவாயிருக்கிறது. இது அவனுடைய ஆளுகையின் இருபதாவது ஆண்டின் பங்குனிமீ 2உ திங்கள் வளர்பிறை நவமி, புணர்பூச நாளில் ஏற்பட்டது. அதே 1926-27ம் ஆண்டின் A R 521 ஆகப் பதிவாகியிருக்கும் கல்வெட்டு அதே கோவிலின் மேற்குச் சுவரில் உள்ளது இதனைத் திரிபுவனச்சக்கரவர்த்தி சிவல்லவ தேவன் மாறவர்மன் தன் ஆளுகை முப்பத்திரண்டாவது ஆண்டில் பதிவு செய்தான். ஆரிநாட்டின் வாசுதேவ நல்லூரிலுள்ள நாளிட்டுவென்றுன் என்ற மாளிகையி லிருந்து தானம் செய்ததாகக் குறிக்கப்பட்டிருக்கிறது. மாறவர்மன் சிவல்லவதேவன் காலம் கி. பி. 862 என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். அதனுல் வாசுதேவநல்லூர் கி. பி. 862லும் பெரிய ஊராக இருந்ததென்பது தெரிய வருகிறது. சடாவர்மன் வீரபாண்டியத்தேவன் கி. பி. 1254ல் இருந்தவனென்பது தெரியவருகிறது. இக்கோவி லிலுள்ள கல்வெட்டுக்கள் எடுக்கப்பெற்று ஆராயப்பெறு மானுல் இம்மன்னவரைப்பற்றியும் அம்மையப்பர் திருக் கோவிலைப்பற்றியும் பல உண்மைகள் புலனுகலாம்.

பாளையக்காரரும் கும்பனியாரும்:

மலையிலும் மலையடிவாரத்திலும் அடர்ந்த காடுகள்

இருக்கின்றன; அவைகளிலிருந்து தெற்குக் கோடியில் வாழைமலையாறும் (புளியங்குடி), கோட்டைமலையாறும் (சிந்தாமணி), வைப்பாறும் காகநதியும் (வாசுதேவநல்லூர்), பாலையாறும் (குலசேகரப்பேரியும் இராசசிங்கப்பேரியும் சிவகிரியை யடுத்த பலகுளங்களும்) உண்டாகின்றன. இவ்விடம் பாளையக்காரர்களில் நெற்கட்டுஞ்செவல் மன்னருக்குச் சேர்ந்திருந்தது. (பின்வரும் குறிப்பு சில்லா வரலாற்றில் (Tinnevelly Gazeteer) இருப்பது:- 1760ல் இக் கோட்டையைப் பிடிக்க முயன்ற நவாபு மகமது யூசுபு முறியடிக்கப்பட்டார். ஆனால் சில காலத்தில் இது நவாபு கையில் வந்துவிட்டது; எப்படிவந்தது என்று சொல்வதற்கு ஆதாரவு ஒன்றுமில்லை. 1766ல் இதுமறுபடி பாளையக்காரர் கையிற் போய்விட்டது. 1767ல் காம்பெல்துரை தனிப்பட்டாளத்துடன் இக்கோட்டையை எதிர்த்தார். ஒரு வாரம் முழுவதும் கணக்கில்லாமல் குண்டுமழை பொழிந்தும் ஒன்றும் செய்ய முடியவில்லை. இக்கோட்டை தொளாயிரம் அடி அகலமும் ஆயிரத்துத் தொளாயிரத்தைம்பது அடி நீளமும் உடையது. முற்றுகையின்போது இணையிலா வீரத்துடன் பாளையக்காரர் கோட்டையைப் பாதுகாத்து வந்தார். காம்பெல்துரை இதனைக்கண்டு மிகமிக வியப்படைந்து பாராட்டினார். கோட்டை மதிலில் ஏற்படும் பிளவுகளை உள்ளிருந்த வீரர்கள் பனைமரங்களாலும் வைக்கோலாலும் உயிரையும் பொருட்படுத்தாமல் முன்வந்து தயங்காமல் செப்பனிட்டது கும்பெனியாரைத் திகைக்கச்செய்தது. காம்பெல்துரை கும்பனியாருடைய படைத்தலைவர். எட்டாம்நாள் காலையில், மழைபெய்து கொண்டிருந்தது. அப்போது பாளையக்காரருடைய வீரர்கள் கோட்டையைவிட்டு

வெளியேறிச் சேதமில்லாமல் காட்டுக்குள்ளே போய்விட்டார்கள். காம்பெல் இப் பக்கங்களைப் பாராட்டி அருமையான கெல் விளைநிலம் என்று எழுதியிருக்கிறார். நாம் கண்டவைகளில் இக் கோட்டையே மிகவும் சிறந்தது என்றும் அவர் கூறியிருக்கிறார். அதனுடைய இடஅமைப்பே அதற்கு அவ்வளவு வலிமையைத் தந்தது. ஆயிரத்து முந்நூறு கெசதூரத்தில் மேற்கிலும் தெற்கிலுமாக அடர்ந்த காடு இருந்தது. அதற்கப்புறம் மலையே. இக்காடுகள் ஏராளமான மறவர்களாலே காவல்காக்கப் பெற்றுவந்தது. அவர்கள் முற்றுகையிடுபவர்களைப் பிறர்காணாமற் கவனித்து வந்ததோடு வேண்டிய போதெல்லாம் திடீரென்று பாய்ந்து கடுமையாகத்தாக்கி வந்தார்கள். இரண்டாவதாக கோட்டை மதிலைச்சூழ முட்கப்பி வேலியைக் காட்டிலும் காப்பமைந்த முள்வேலி யிருந்தது. கிழக்குத் தெற்கு மதில்களை ஒட்டிப் பேயாறுஓடி இயற்கைப் பாதுகாப்பாக இருந்தது. மதில்கள் உயரமாகவோ அகலமாகவோ இருந்தனவல்ல; அவை அடிப்பக்கம் பதினைந்தடியிலிருந்து உச்சியில் ஐந்தடியாகச் சரிந்து பச்சைவெட்டுச் செங்கலாலே கட்டப்பெற்றிருந்தன. காம்பெல் முற்றுகையில் ஒரே இடத்தில் ஐந்நூறு குண்டுகள் போட்டும் சிறிதும் அசைக்க முடியாதபடி அவ்வளவு வலிமையுடன் அவை இருந்தன. அக்கோட்டை தரைமட்டமாக்கப்பெற்று விளைநிலமாகி நூறுண்டுகளாகின்றன. ஆயினும் இன்றும் அச்செங்கற்கள் காணப்படுகின்றன; குண்டுகளும் கண்டெடுக்கப் படுகின்றன. இவ்விடம் இப்போதும் கோட்டைவிளை என்ற பெயருடன் இருக்கின்றது.

## ௧௦. இலக்கியமும் பாடல்களும்.

இக்கோவிலைப்பற்றிய நூல்கள் தலபுராணத்தைத் தவிர வேறு இல்லை. புராணம் மிக அழகிய பாடல்களால் ஆனது. புராணப்பாடல்களிற் சில பின் வருவன :—

### சிவபெருமான்.

இருநீர்மதி முடியார்தம திடமீதினொர் பிடியார்
திருமாலெனும் விடையார்எழில் திகழ்மான்மழு வுடையார்
ஒருபாலன பொடியார்புலி உடையார்அதிர் துடியார்
அருணையகர் கருணாகரர் அடிமாமலர் பணிவாம்.

### இடதுபாக வல்லியம்மை.

தலப்பாகந் தனிலுயர்ந்த தேவைவளர் கரும்பையன்பர் தமிழ்ப்பா மாலை
சொலப்பாகந் தருதேனை இமயவரை இளம்பிடியைச் சுருதிமுன்பு
கலப்பாகந் தானெனவே செவிதாழ்த்தோர் கலப்பான கனியைநாறு
வலப்பாக மொழியாளை இடப்பாக நாயகியை வணக்கம் செய்வாம்.

### இடப்பெருமை:

காசியின் இறக்கக் கமலையிற் பிறக்க கனகமன் றத்தினைக் காண
பேசரும் அருணா சலந்தனை நினைக்கப் பேறுதந் தருளுமித்தலத்தை
நேசமாய்க் கண்டார் இறந்தவர் பிறந்தார் நினைத்தவர் யாவர்க்கும் இனிதாய்
ஆசகன் றிருந்த ஞானவீட்டின்பம் ஆகுநாம் அறைந்திடல்அரிதே.

ஆற்றுப் பெருமை :

அதிகப் பூரதி பலவுமோர் கடத்தலைத் தறவோன்
நுதியிப் பாரிடைச் சேமித்த நால்அதில் தோன்று
நதிசிட் சேபயா றென்றும்வைப் பாறென்று நாம
கிதிகிட் சேபமொத் திடும்இதி னிறைவடி வுரைப்பாம்,

புளியமரமானது :

எந்தமுன்பய மின்றிப் பரிகலம்
சிந்தலால்மாம் போல்நிற்கும் செய்கையால்
அந்தண்வார்கடல் சூழ்அம் புவிக்கணே
சிந்தநீள்மாம் ஆகென்று செப்பினர்.

இராமனும் சம்புகக்கொலைப் பாவமும்

எனவு ரைத்தலும் மனுமுறைக் கிறுதவ றென்னச்
சினவி வெய்யவாட் படையெறிந் தவனுயிர் செகுப்பப்
பனவன் மைந்தனும் ஆவிபெற் றனன்பகர் தவசி
தனைய டும்பழி ராகவன் தணந்தவா றுரைப்பாம்.

காய்விடக்களன் அன்றிஇப் பவம்கடப் பரிதென்
றுய்தரும்சிவ மலையிற்பஞ் சக்குரோ சமதில்
சாய்கையும்செய்தோர் சிவப்பிர திட்டையும் தடமும்
மேயதன்பெயர்க் கமைத்ததின் இன்புற மூழ்கி.

## அம்மையப்பர் திருவுருவம்

நெற்றிமீ தரைக்கண் உண்டு நெடிய கூந்தல் ஓர்புறம்
கற்றைமேவு சடைகளாம்ஓர் காதின் மின்று சங்கமே
துற்றும் ஓர்கை வளைகள் ஒன்று சூலம் ஏந்தும் இதுவலால்
மற்று முற்றதனமி ரண்டில் ஒன்றுபின் மறைந்திடும்.

கச்ச மற்ற சிலம்ப கன்றோர் கால்கழல் புனைந்திடும்
பச்சை வன்ன மற்றோர் பாதி பவள வன்ன மேனியாம்
இச்செ யல்பொ ருந்து மாதை ஈன்றெடுத்த பின்னைநேர்
முச்ச கத்தில் உள்ளபேரில் எவர்தவங்கள் முற்றினர்,

சென்னியிலோர் புறம்கூந்தல் ஓர்புறம்கோ டீரம்இரு செவியில் ஒன்றில்
துன்னியசங் கொன்றில்மணித் தோடுகராம் புயத்தில் ஒன்றில் தொடிமற் றொன்றில்
வன்னியுறு மருவிரண்டு காலில்ஒன்று மணிச்சிலம்பு கழலொன்று
இன்னவடி வால்வாம இமயவல்லி வலப்பாகத் தீசன் ஆனர்,

## தேவையும் திருச்செங்கோடும்

இப்பெருந் தலங்கள் தம்முள் ஈசனோ டிறைவி கூடி
ஒப்பிலா தேகமாகி உவந்தினி திருக்கும் மூதூர்
செப்பரும் திருச்செங் கோடு தேவைஎன் றிரண்டு மேலாம்
அப்பதி தனினும் இந்தத் தேவையே அதிக மாமால்.

இடபவாகனக் காட்சி

வட்டிலே எழுதாத மறையிலே அன்பர்தம இதயக் கஞ்ச
வீட்டிலே நாதாந்த வெளியிலே தெளிதமிழின் வியந்த மூவர்
பாட்டிலே அரியபரா பரத்திலே இருக்குமுதற் பாமர்இன்றோர்
மாட்டிலே எறிவரும் தன்மைஎன்கொல் என்றுபலர் வகுத்து
நின்றார்.

உ முற்றிற்று ௦






கணேசன் அச்சக்கூடம், திருநெல்வேலிப் பாலம்–250.–44.

# வாசுதேவநல்லூர்க் கோவிற் படவிளக்கம்.

1 கருப்பக் கிரகம்
2 அர்த்த மண்டபம்
3 மாமண்டபம்
4 மணிமண்டபம்
கா. நந்தி
5 கோபுரவாசல்
6 கொடிமரம்
7 பலிபீடம்
8 ஊஞ்சல் மண்டபம்
9 குடைவருவாயில்
10 வாகன அறை
11 வேலை நிலையம்
12 மடைப்பள்ளி
13 பள்ளியறை
14 பிள்ளையார்
15 கலியாணசுந்தரர்—பிரியாவிடையாள்
வைத்திய சிந்தாமணிநாதர்—
இடப்பாகவல்லி
16 தெற்கணமூர்த்தி
17 ஆறுமுகர்
18 சண்டேசர்
19 வேள்விச்சாலையும் கிணறும்
20 கூத்தர் மண்டபம்
21 புளியமரம்
22 நெற்சேர்
23 கோவில் வீடுகள்
24 திருவிழாப் பந்தல்

# வாசுதேவநல்லூர்ச் சிந்தாமணிநாதர் கோவில்

200 அடி




கிழக்கு மாடத்தெரு

105 அடி

90 அடி 23 38 அடி

40 அடி

பந்தல் மண்டபம்

165 அடி

கும்பக்குளம்

165 அடி

24

